உ

திருச்சிற்றம்பலம்.

# சிவத்துரோககண்டன நிராகரணம்.



இது

திரிசிரபுரத்து

ஸ்ரீலஸ்ரீ. தியாகராசச் செட்டியாரவர்கள் மாணாக்கர்

உறையூர்

வைத்தியநாதச் செட்டியாரால்

இயற்றி,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

துர்முகி௵

1896.

உ

சிவமயம்.

# சிவத்துரோக கண்டன நிராகரணம்.

வெற்றி வேற் பிள்ளை யென்பவரே! நீரெழுதிய சிவத்துரோக கண்டன மென்னும் பெயர் பூண்ட நியாயத் துரோகாபாச புத்தக மொன்றை யாம் கண்டனம்.

அதில் "சைவ சமயிகளே வித்துவான்களே" என இருவகை யாரை விளித்து முன்னிலையாக்கி ஸ்ரீ. தம்பையா பிள்ளை யவர்களைப் படர்க்கை யிடத்து வைத்துக் கூறியநீர், அதனை மறந்து பின், பிள்ளையவர்களையும் நாராயணச் செட்டியா ரவர்களையும் இடையில் விளித்துக் கூறிய தென்ன தடுமாற்றம்? அங்கே சைவ சமயிகளே என்று மாத்திரம் விளித்தாற் போதாதா? சைவ சமயிகளுள் வித்துவான்கள் இல்லையோ? வித்துவான்களே யென்று பின் விளித்தது யாரை? இரண்டு மொன் றென்னில், சைவ சமய வித்துவான்களே யென்ன விளியாது அங்ஙனம் விளித்ததினால் வருங் குணமென்னை? மற்றதனால் வருங் குற்ற மென்னை? இங்ஙனம் மிகைபடக் கூறியது வேற் பிள்ளையாகிய நுமக்குச் சீர்ப்பிழை யாகாதா? அப்படியன்று. (சைவ சமயிகளே நன்றாகக் கவனியுங்கள்) என்னும் பிற் கூற்றால் இரு விளியு மொரு பொருளாக நின்ற நங் கருத்து நுமக்குத் தெரிந்திலதா என்பீரேல்;—"நல்லார் பிறர்குற்ற நாடார் நலந் தெரிந்து, கல்லாதவர் குற்றங் காணுரே" என்பதால் சைவ சமயிகளென்றது அச்சமயத்துள்ள பாமரரை யொழித்து வித்துவான்களை மாத்திரம் காட்டு மென்பதும் வித்துவான்களே என்பது ஏனைச் சமயத்து வித்துவான்களைக் காட்டு மென்பதும் பெறப்படுகின்றன வாகலின், அது பொருந்தாதென விடுக. இங்ஙனம் சிவத்துரோக கண்டன மெழுதப் புகுந்த நீர் சிவத்துரோக கண்டனத்துக் குடன் படாத சிவத்துரோகிகளாகிய அன்னிய சமய வித்துவான்களோடு கூடி நீருஞ் சிவத்துரோகி யாயினீரே! ஆ! ஆ!! இஃது என்ன பாவம்!! கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே, பிள்ளையார் பிடிக்கப் பெருங் குரங்காக முடிந்ததே, இஃது இவ்வளவி னிற்க.

திருக் கோவையா ரென்பது நூலா? திருக் கோவையா ருண்மை யென்பது நூலா? திருக்கோவையா ரென்பது நூலெனவும்,

திருக் கோவையா ருண்மை யென்பது உரை யெனவும் பெறப்படவும் தப்பாகச் 'சிவத்துரோக நூலென்றும்' 'இந்த நூல் முழுதிலும்' என்றும் எழுதிய தப்பிலிருந்து எப்படித் தப்பப் போகின்றீர்?

மேலும், அறிஞ ரல்லாரை யறிஞர் பெருமானா ரென்றும், ஞானி யல்லாரை ஞானாசாரிய ரென்றும் பிள்ளையவர்கள் கொண்டாடி யெழுதி யிருக்கின்றார் என்றீர். திருக் கோவையார் உண்மை யுரையிலே அவ்வாறிருத்தலை யாம் யாண்டுங் கண்டிலம். இங்ஙனமிருப்ப, அவர்க ளெழுதியதாகச் சொப்பனங் கண்டீரா ? அல்லது மயங்கி யுரைத்தீரா ? உரைக்கும் நூலுக்கும் பேதந் தெரியாத நும்மிடத்தி லிஃது ஓரதிசய மன்று. உரையாசிரியர் எழுதிய திது; பதிப்பாசிரிய ரெழுதிய திது ; ஏனை யாசிரியர்கள் எழுதியன இவை ; என்று பேதந் தெரியாமல் புனைந் துரைத்தார் வாக்கைப் பதிப்பாசிரிய ரெழுதிய தென்று உளறிய நுமக்கு எதுதான் தெரியப் போகின்றது !

நூல்களை அச்சிற் பதிப்பிப்போர் தஞ்சமய நூல்களையே யன்றிப் பரசமய நூல்களைப் பதிப்பித்தால் அஃதவர்கள் மதக் கொள்கைக்குத் துரோக மாகுமா ? ஆகுமேல், சீவக சிந்தாமணி முதலிய சைன நூல்களைப் பதிப்பித்து வெளிப்படுத்தும்படி பொருள்கொடுத்துதவி செய்த திருக் கைலாச பரம்பரைத் திருவாவடுதுறை யாதீனத்து ஸ்ரீலஸ்ரீ·சுப்பிரமணிய தேசிக பண்டாரச் சந்நிதி முதலினோர் சிவத் துரோகிகள் ஆதல் வேண்டுமே. அவர்கள் சிவத் துரோகிகளாகும்போது, திருக் கோவையா ருண்மை யுரையை வெளிப்படுத்திய தம்பையா பிள்ளை யவர்களுஞ் சிவத்துரோகி யாவாரே யன்றி மற்றெவ்வா றாகுவர் ? மேலும்,

"பிணியெலாம்வரினுமஞ்சேன்பிறப்பினோடிறப்புமஞ்சேன்
றுணிநிலாவணியினான்றன்றொழும்பரோடழுந்தியம்மா
திணிநிலம்பிளந்துங்காணாச்சேவடிபரவிவெண்ணீ
றணிகிலாதவரைக்கண்டாலம்மநாமஞ்சுமாறே".

என்ற தமிழ் மறைக்கு விரோதமாகத் திருமண்ணெறியினரோடு, பண்டாரச் சந்நிதிகள் முதலினோர்களும், தொண்டைமண்டலத்துச் சைவ வேளாளர் முதலினோர்களும் பந்தி போஜனஞ் செய்தல் முதலிய கொண்டாட்டங்கள் உடையரா யிருத்தல் சிவத்துரோக மாகாதா ? இது சிவத்துரோக மென்றெடுத்துக் காட்டி அவர்களைக் கண்டிக்க வருவாயை நோக்கி மறந்தீர் போலும்.

வெற்றிவேற் பிள்ளையாரே ! திருக்குறட் பரிமேலழக ருரையை வாசித்திருக் கின்றீரா? அதில் "சுவை யொளி யூறோசை" என்ற திருக்குறட்குத் தத்துவ வாராய்ச்சி சைவ நூலின்படி வந்ததா ? சாங்கிய நூலின்படி வந்ததா ? சாங்கிய நூலின்படி வந்த உரையை அச்சிட்டு வெளிப்படுத்திய ஸ்ரீலஸ்ரீ. ஆறுமுக நாவல ரவர்களுஞ் சிவத்துரோகி யாதல் வேண்டுமே. அந்தோ ! அவலை நினைத்து உரலை இடித்தீரே ! குருவின் கொள்கைக்கு மாறாய் நிற்கும் நுமது சிட்டத்துவ மென்ன சிட்டத்துவம் !

"வள்ளுவரன்பர்மொழிவாசகந்தொல்காப்பியமே
தெள்ளுபரிமேலழகர்செய்தவுரை—ஒள்ளியசீர்த்
தொண்டர்புராணந்தொகுசித்தியோராறுந்
தண்டமிழின்மேலாந்தரம்."

என உமாபதி சிவாசாரியர் திருவாய் மலர்ந்தருளிய இத்திரு வெண்பாவில் பரிமேலழக ருரையைத் தமிழ்வேதங்களோ டொப்ப விதந் தோதி யிருப்பதைத் தெரிந்திலீரா ? இங்ஙனங் கூறிய கொற்றங் குடியாரையும் சிவத்துரோகி என ஆக்கி விட்டீரே. ஹா! ஹா !! நுமது கொள்கை நுனிக் கொம்பிலேறி அடிக் கொம்பைத் தறித்த இடையன் கொள்கை யாயிற்றே! பரிதாபம் !! பரிதாபம் !!

இதனால் நீருஞ் சிவத்துரோகி யாயினீர் ; எம்மையுஞ் சிவத்துரோகி யாக்கி விட்டீர் ; இவ்வாறே மற்றைச் சைவ சமயிகள் யாவரையுஞ் சிவத்துரோகி யாக்கி விட்டீர்; நங் குடியைத் "தம்பி பிறந்து தரைமட்ட மாக்கி விட்டா" னென்னும் பெரும் பட்டமும் பெற்றுக் கொண்டீர். வெற்றிவேற் பிள்ளையாரே, இனி அப்பாற் செல்வோம் வாரீர்.

மண் பெண் பொன் என்னு மூன்றனுள் பெண் அனுபவிக்கப் படும் பொருளோ ? அனுபவிக்கு முதலோ ? அனுபவிக்கப்படும் பொருள்களாகிய மண்ணோடும் பொன்னோடுஞ் சேர்த்துப் பெண் எண்ணப்பட்டதனால், பெண் அனுபவிக்கப்படும் பொருளெனவும் புருடன் அனுபவிப்போ னெனவும் உண்மை தெரிகின்றது ; இது போல முத்தியிலே சிவம் அனுபவிக்கப்படும் பொருளோ ? அனுபவிக்கு முதலோ வென்று வினவு மிடத்துச் சிவம் அனுபவிக்கப் படும் பொரு ளெனவும் பக்குவான்மா அனுபவிப்போ னெனவும் விடையாகின்றது. இதனா லன்றோ தாயுமானவரும்

"அறியுந்தரமோநானுன்னையறிவுக்கறிவாய்நிற்கையினாற்
பிறியுந்தரமோநீயென்னைப்பெம்மானேபேரின்பதாய்ச்
செறியும்பொருணீநின்னையன்றிச்செறியாப்பொருணுன்பெறும்பேற்றை
நெறிநின்றொழுகவிசாரித்தானினக்கோவில்லையெனக்காமே."

என்று கூறினர்? இது போக.

"இறைகலந்த இனவெள்வலை சோர வென்னுள்ளங் கவர் கள்வன்" முதலிய திருவாக்குக்கள்; நாயகி யினது பிரிவால் நாயகன் வருந்துதல், அகப்பொருட் டுறைகளில் யாண்டு மின்மையால், சிவப் பிரிவால் ஆன்மாவுக்கு வந்த வருத்த மிகுதியை யுணர்த்துதற்காக, ஆன்மாவை நாயகியாகவும் பரம்பொருளை நாயகனாகவும் வைத் துணர்த்தியதே யன்றி, முடிந்த முடிபினும் சிவன் நாயகனாவும் ஆன்மா நாயகியாகவும் இருக்கு மென்பதை யுணர்த்த வந்தன வல்ல. நாயக நாயகித்துவ பாவமாவது, நாயகி நாயகத்துவ பாவமாவது இல்லாத முத்தி நிலையில், அஃதுண்டெனக் கூறல், பாவனையாற் றெளிந்து சுவானுபவம் பெறுதற்கே யன்றி வேறொன்றை நோக்கி யன்று. குறையாத இன்பவடிவாகிய சிவத்தை அனுபவிக்கப் படும் பொருளாக வையாது இன்பத்தை யனுபவிக்கு முதலாக வைத்தால், அச்சிவம் இன்பத்தாற் குறைவுடையதென வேற்படும் அல்லவா? ஏன் அங்ஙனஞ் சொல்லுகின்றீர்? பரம்பொருளை நாயகியாக வைத்துச் சொல்லுமிடத்தும் இத்தோஷ மேறுகின்றதே யென்பீரேல்; நீர் சொல்வ துண்மை, ஆயினும் தேடி யடைபவன் நாயகனாகவும் அடையப்படுபவள் நாயகியாகவும் இருத்தலினால், இது நோக்கித் திருக்கோவையா ருண்மை யுரையிலும் உரையாசிரியர் எழுதிவைத்தாரே யன்றிச் சிவனை நாயகியாகவும் பக்குவான்மாவை நாயகனாகவும் கொள்ளும்படி யெழுதிவைத்தார் அல்லர் என்பது 'உலகத்திற் காணுததற்கு உவமையாகக் கண்டதையே உவமித்தா லன்றி வேறொன்றால் அறிவித்தால் அது புலப்படாது' என வரும் அவர் வாக்கினாலேயே பெறப்படுகின்றது. மேலும் சிவஞானபோதத்து ௧0-ம் சூத்திரத்தி னுரையிலே சிவஞான முனிவரும் "தலைவனும் தலைவியும் போல இன்ப நுகர்ச்சி மாத்திரையானொற்றுமைப் படுதலோ" என்று கடாய்ப் பூர்வ பட்சமாக்கி விலக்கியதனாலும் இது தெரிந்துகொள்ளக் கிடக்கின்றது. இவை யெல்லாம் இங்ஙனமாகவும், சிவனை நாயகியாக வுரையாசிரியர் வைத்துவிட்டார்; தம்பையா பிள்ளையு மொத்துக்கொண்டார்; சமணர் பௌத்தர்களும் இப்படிச் சொல்லமாட்டார்கள்; இது பெருஞ் சிவத்து

ரோகம்! சிவத்துரோகம்!! என்று ஏன் வேஷம் போட்டாடு கின்றீர்; பிறருடைய கல்விப் பெருமிதத்தால் உமது வருவாய்க்கு நஷ்டம் வருமென்றால் இப்படியா ஆடுவது ? திருக்கோவையா ருண்மை வெளிப்பட்டுத் திங்கள் பலவாயும் சிவத் துரோகமென்னு நியாயத் துரோகாபாசம் வெளிப்பட இது காறுஞ் சென்றதே. இஃது அம் பலத்துக்குச் சீக்கிரம் வெளிப்படாதது என்னே? ஆச்சரியம்! ஆச்ச ரியம் !!

"தம்பையா பிள்ளையென் றெழுதுவதைப் பார்த்துத் தம்பெயர் பிழையற வெழுதத் தெரியாதவர் என்று பிறர் சொல்கின்றார்கள் அது என் பொறுப்பன்று" என்றீர். வெற்றிவேற் பிள்ளையாரே! நீர் இப்படிச் சொல்லித் தப்பிக்கொள்ளப் பார்க்கின்றீரா? நுமக்குச் சொன்ன பிறர் இலக்கணம் வல்லுநரா? அல்லரா? வல்லுந ரெனின், அதற்கு இலக்கண சூத்திரங் காட்டாமல் விடுவாரா? அல்ல ரெனி ன், அது பிரமாண மாகுமா? நுமது பொறுப்பன்று எனின், அவ் விஷயத்தை யேன் தலைமேற் கொண்டீர்? நீர் இங்ஙனஞ் சொல்வத னால் இலக்கணம் வல்ல பிறர் பிழை காட்டினும் கண்டுணருஞ் சக்தி யில்லாதவ ரென்று புலப்படுகின்றதே. ஆயினுஞ் சொல்கின் றேன் கேண்மின், "பொதுப்பெயர்-சில விகாரமா முயர்திணை" என வருஞ் சூத்திரத்தில் நிலைமொழி யீற்றை யேனும், வருமொழி முதலை யேனும், அவ்விரண்டை யேனும் கிளந்தோதாமல் "சில விகா ரமா முயர்திணை" என்று பொதுப்படக் கூறியதனால், ஈறு முதலும் வேண்டியவாறே புணரு மென்ப தாயிற்று. ஆகவே தம்பைய பிள்ளை யென ஈறு கெட்டு இயல்பாகவரினு மென்? அல்லது ஒற்று மிகுந்து வரினு மென்? அல்லது ஈறு கெட்டு அதன் அய னீண்டு ஒற்று மிகாமல் வரினு மென்? மிகுந்து வரினு மென்? எல்லா வழக் கும் பிழை யல்ல வென்பது பெறப்படுகின்றது. இதனாலன்றோ ஆறு முக நாவல ரவர்களும் தம்முடைய ஆவேதனங்களில் ஐயாசாமிப் பிள்ளை, வீராசாமிப்பிள்ளை யென வழங்கினார்கள் என வறிக. வெற்றி வேற் பிள்ளையாரே! இவ்விலக்கணம் நுமக்கு விளங்காவிடின், வல் லார் வாய்க் கேட்டுணர்ந்து சமாதானம் பெறுக. 'தன் குற்ற நீக்கிப் பிறர் குற்றங் காண்கிற் பின்' என்ற திருக்குறளை நீரறிந்தீ ராயின், ஆராய்ந் தடங்குவீர். தம்பையா பிள்ளை யெனல், பிழை யெனக் கொக்கரித்து எழுந்த நீர் வெற்றிவேற் பிள்ளை யென நுமது பெய ரையுந் திட்டி வெறும் பிள்ளை யானீரே. அஃது இலக்கண விரோத

மெனப் பிறர் சொல்லாமல் விட்டு விட்டாரா? வெற்றி வேலன் என்னும் பெயரோடு பிள்ளை யென்பது சேருமிடத்து வெற்றி வேலப் பிள்ளை யென்ருகுமா? வெற்றிவேற் பிள்ளை யென்ருகுமா? பிறரிடங் கேட்டுச் சொன்மின்.

நும் பெயரிற் குற்ற மறியாமற் பிறர் பெயரிற் குற்றஞ் சொல்ல என் முயன்றீர்? இது கேட்டு இவர் அன்னிய சமயத் தவரினும் தாழ்ந்தவர் என்று பிறர் சிரிக்க இடமாகின்றதே.

வெற்றிவேற் பிள்ளையாரே! பிறரைச் சிவத் துரோகிகளென்று சொல்ல வந்து நீரே சிவத் துரோகி யாயினீர். தெரியாதவரென்று பிறரை எள்ளி யெழுந்து நீரே நூலுக்கும் உரைக்கும் பேதந் தெரியாதவ ராயினீர். உரையாசிரியருள்ளக் கிடக்கை அறியாமல், சொல் வழக் கிறந்த விடத்தே சொல் வழக்குக் காட்டி இல் வழக்குடைய ராயினீரே. புனைந் துரைத்தார் வாக்கைப் பதிப்பாசிரியர் வாக்கென மயங்கித் தேவார முதலியன திருவருட்பா வென்பது திருக்கோவையா ருண்மையிலே கண்டதெனப் போலி யருட்பா மறுப்பிலே உரைத்த நுமது குருவின் சிஷியர் வாக்கைப் பொய்யென வுணரும்படி செய்து குருவுக்குத் தோஷ மேற்றினவ ராயினீர். பிறர் பெயரிற் குற்றந் தீட்டி நும் பெயரிற் குற்றஞ் சூடிக் கொண்டீர். வேற்றிவேற்பிள்ளையின் மறைந்து நின்று அம்பலமாய் வந்து வெறும் பிள்ளை யாயினீரே. நமக்குக் கல்வி பயிற்றிய வடலி யடைப்பு வேலுப்பிள்ளை யென்பவரை மறந்து வருவாயின் பொருட்டுத் தமக்குக் குரு வாகாத வேருெருவரைக் குரு வெனக் கொண்டாற் போல, சிவத் துரோக மாகாத திருக்கோவையா ருண்மை யுரையைச் சிவத் துரோக நூலெனக் கொண்டு மடிந்தீரே!

நும்முடைய ஆபாசப் பிறல்களை மற் றியாவர் தரிப்பார்? வெளி மயக்கத்தால் மயக்குற் றியாரேனும் தரித்துக்கொண்டு நும்போல ஆடுவா ரென நினைந்து பிறலிற் சில கோடிகளை மாத்திரம் விரித்துக் காட்டினேன். இவை கொண்டு நீரும் நும் போன்ற பிறரும் சமாதானம் பெற்று நல்லுய்தி யெய்துக. சுபம்.

